சிவகுகமயம்.

பதினெண் கீழ்க்கணக்கு.

மூவாதியார் செய்த

# ஐந்திணை யெழுபது



இலக்கண விளக்க ஆசிரியர் பரம்பரை,

சோமசுந்தர [illegible]கரால்

பரிசோதிக்கப்பட்டு [illegible] பதிப்பிக்கப்பட்டது.

[illegible] அச்சுக்கூடம்,
மாயூரம்.
1920

 [விலை அணு 4.

உ

சிவமயம்.

அமிழ்தினுமினிய தமிழினிடத்தும் தமிழரிடத்தும்
மிக்க அன்புடையராய

மேகசிங்கன்,

திருவாளர், S. இரத்தினம் பிள்ளையவர்கட்கு
இந்நூல் உரிமையாக்கப்பட்டது.

சங்கமரீஇய நூல்களிற் (1982) [illegible]கீழ்க்கணக்கு [illegible]யுமொன்றென்பர் பெரியார். நாலடி நாலாய [illegible]ணிக்கடிகை முதலாய அறநூல்களும், ஐந்திணையின் பாற்பட்ட இன்ப நூல்களு மிந்நூளடங்கும். இவ்வகைத்தாய நூல்களுள்ளோரண்டு பதித்துள்ள ஐந்திணையெழுபது நீங்கலாக மற்றவை பலராலும் பல பதிப்புகள் பதிக்கப்பட்டுள்ளன.

இவ் ஐந்திணையெழுபது சங்கப்புலவரை யுள்ளிட்ட சான்றோரான மூவாதியாராற் பாடப்பட்டதென்பதைத் தவிர, அவரைப் பற்றிய விவரம் ஒன்றும் அறிவதற்கில்லை. இந்நூல் எழுபது பாக்களையுடையது. இன்பப் பகுதியின்பாற் படுவது. இதனிற் காணும் இழுமென்னோசையும், விழுமிய பொருளுங், கண்டது போல விளங்குந்திறனு மிகவும் பாராட்டற்பாலன. உரையாசிரியர் பலராலு மெடுத்தாளப்பட்டுள்ள இத்துணைச்சீரிய நூலில் முல்லை 13, 14-வது பாக்களும், நெய்தலில் கடைச்செய்யுளும் அகப்பட்டில. இந்நூலுக்குப் பழைய உரை யொன்றுண்டெனினும், அது முதலிருப்பத்தாறு பாக்கட்கே இருக்கின்றது. இவ்வுரையோடு இப்பகுதியை இருபதாண்டுக்கு முன்னர் வித்வஸ்ரீ மு. இராகவையங்காரவர்கள் செந்தமிழ்வாயிலாக வெளியிட்டார்கள். மற்றவை பதிக்கப்படவில்லை. எஞ்சிய பாக்கட்கும் பூதறிவுடைய பெரியாரொருவர் குறித்த உரையோடு முதற்றடவையாக இப்பொழுது பதிப்பிக்கப்படுகிறது. பழந்தமிழ் நூல்களின் உண்மையுருவம் கண்டு ஒரு நூல் ஒழியாவண்ணம் அழியாவெழுத்திலிடுதல் மிக மிகத் துன்பமான செயலேயாமெனினும் அச்சுவாகன மேறிய ஞான்றே புலவர் சிகாமணி யென்பார் சிலர், இக்காலத்து, தாங்கள் பாடபேதங்களையும், உண்மையுருவங்களையும் பழந்தமிழ் நூல்களைத் துருவியாய்ந்து கண்டதாகக் கூசாமல் வெளியிடுவதைக் காண்பதாலுண்டாகும் மனக்கசப்பினும், பெரிதாகாது. இதுவும் அவ்வாறாகா தென்றே கொண்டுள்ளேன்.

'கோழைமிடற்றேன் கவிகோளுறாதே'னாகிய அடியேன் அடிப்பட்ட சான்றோர் நூலை யாய்தற்குத் தகுதியுடையனல்லேனாயினும் இதுகாறும் இந்நூல் அச்சவாகனமேறாக்குறையை நீக்குவானெண்ணி, உரையுங்கண்டு ஒருவாறுருவமும் கண்டு பதித்தேனாகையான் 'குற்றங்களைந்து குறைபெய்து வாசித்தல் கற்றறிந்த மாந்தர்கட'னும் என்பதோடு, இது இனிதுமுடிக்க வல்லமைதந்த திருவருளை வழுத்துகின்றேன்.

சோமசுந்தர தேசிகன்.

# பாட்டு முதற் குறிப்பு அகராதி.

உ

கடவுள் துணை.

மூவாதியார் செய்த

# ஐந்திணையெழுபது

மூலமும் உரையும்.

## க.—குறிஞ்சி.

க *அவரை பொருந்திய பைங்குர லேனல்
கவரி மடமா கதூஉம் படர்சாரற்
கானக நாட மறவல் வயங்கிழைக்
கியானிடை நின்ற புணை.

தோழி தலைமகனை வரைவுகடாயது.

(இ-ள்) அவரை பொருந்திய கதிரையுடைய பசுந் தினையைக் கவரிமடமா கதுவாநின்ற படர்ந்த சாரலினையுடைய கானகநாடனே! மறவாது நினைப்பாயாக; வயங்கா நின்ற அணியினையுடையாட்கு யானடுவுநின்ற புணை; எ-று. (க)

உ †கொல்லைப் புனத்த வகில்சுமந்து கற்பாய்ந்து
வானி னருவி ததும்பக் கவினிய

---

* இதனை "பாங்கிதலைவியை நீங்கித் தலைவற்கு ஓம்படை சாற்றற்குச் செய்யுள்" என்பர் அகப்பொருள் விளக்கவுரைகாரர். (சூத். கசுகூ) இளம் பூரணம் ருகூ மேற்கோள்.

† "இதனை நச்சினார்க்கினியர் "வரைவுதலைவரினும்" (தொல், பொ, கள, உயி) என்பதற்கெடுத்தோதி, இதன்கண் "நயனுடையன்" என்பதனால் வரைவுதலைவந்தமையும் 'நீப்பினும்' என்பதனால், அவன்வயிற்பரத்தமையுங் கூறினாள்" என்றார். இளம்பூரணம் நிஅக மேற்கோள்.

நாட னயமுடைய னென்பதனு னீப்பினும்
வாடன் மறந்தன தோள்.

வரைவுமலிந்து பொருள் வயிற்பிரிதல்.

(இ - ள்) கொல்லைப்புனத்த அகிலைச்சுமந்து கற்கள்மேற் பாய்ந்து மலையாலுளதாய அருவி முழங்குதலான் அழகு பெற்ற நாடன் தன்னையடைந்தார்க்கிரமுடையனென்ப தனான் அவன் பிரிந்தானாயினும் வாடுதலை மறந்தன என் றோள்கள் ; எ-று (உ)

ங இலையமர் தண்குளவி யேய்ந்த பொதும்பிற்
குலையுடைக் காந்த ளினவண் டிமிரும்
வரையக நாடனும் வந்தான்மற் றன்னை
யலையு மலைபோயிற் றின்று.*

தோழி தலைமகன் வரைவுமலிந்தமை தலைமகட்குச் சொல்லியது.

(இ - ள்) இலையின்றி தண்குளவிக்கொடிகள் படர்ந்து மூடிய பொதும்பின்கட் பூங்கொத்தையுடைய காந்தளின் இனவண்டுகளொலிக்கும் வரையகநாடனும் வரைவொடு வந்தானாதலான் இன்று நமக்கு அன்னையலைக்கும் அலை போயிற்று ; எ-று. (உ)

ச †மன்றப் பலவின் சுளைவிளை தீம்பழ
முண்டுவந்து மந்தி முலைவருடக் கன்றுமர்ந்

---

*இது "தலைமகள் உவகையாற்றாதுளதகதோடு கிளத்தற்குச் செய்யுள்" என்பர் அகப்பொருள் விளக்க வுரைகாரர் (சூ. கஎச) இளம் பூ. ருஅஉ மேற்கோள்.

† தொல்காப்பியம், பொருளதிகாரம், களவியல், சூத்திரம்-உய, நச்சினார்க்கினியருரை மேற்கோள். இளம் பூ. ருகூச மேற் கோள். பொருநர் முதலியோர் மன்றப்பலவில் தம் வாச்சியங் களைத்தொங்க விடுதலியல்பு; புறம் கஉஅ·க; ககஎச:ரு.

தாமா சுரக்கு மணிமலை நாடனை
யாமாப் பிரிவ திலம்.

தலைமகன் சிறைப்புறத்தானாக இயற்பழித்த தோழிக்குத் தலைமகளியற்பட மொழிந்தது.

(இ-ள்) மன்றின்கணின்ற பலவின் சுளைமுதிர்ந்த இனிய பழத்தைத் தின்றின்புற்றுவந்து ஆமாவின்முலையை மந்திவருட அவ்வாமாத் தன் கன்றிற்குப்போல அன்புபட்டுப் பாலைச்சுரக்கும் அணிமலைநாடனை யாமுளேமாப் பிரிவதிலம்; எ-று. (௪)

௫ சான்றவர் கேண்மை சிதைவின்றா யூன்றி
வலியாகிப் பின்னும் பயக்கு மெலிவில்
கயந்திகழ் சோலை மலைநாடன் கேண்மை
நயந்திகழு மென்னுமென் னெஞ்சு.

இதுவுமது.

(இ-ள்) அமைந்தாருடைய நட்புச் சிதைவின்றி நிலைபெற்று அடைந்தார்க்கு வலியாகி மறுமையின் கண்ணும் பயனைச்செய்யும்: அதுபோல, நீரால் திகழாநின்ற சோலையையுடைய மலைநாட்டினுடைய நட்பு மெலிவின்றி யின்பத்தைத்திகழாநிற்குமென்றுநின்றது என்னெஞ்சு; எ-று. (௫)

௬ பொன்னிணர் வேங்கை கமழு நளிர்சோலை
நன்மலை நாட மறவல் வயங்கிழைக்கு
நின்னல்ல தில்லையா லீயாயோ கண்ணோட்டத்
தின்னுயிர் தாங்கு மருந்து.

புணர்ந்துநீங்குந் தலைமகனைக்கண்டு தோழி வரைவுகடாயது.

(இ-ள்) பொன்போன்ற பூங்கொத்தையுடைய வேங்கை கமழாநின்ற குளிர்ந்த சோலையையுடைய நன்மலை

(இ-ள்) பன்றிகள் கொம்பினாலுழுத சுட்டுக்கரிந்த புனக்கொல்லையுள் வாழையின் முதிர்ந்த காயைக் குரங்கினுட்கடுவன் களப்புழுதியுட் புதைத்தயருந் தாழ்ந்த அருவிகளையுடைய நாடன், என்றோழியாகிய நோவினைக்கு நெஞ்சூன்றுகோலாகத் தெள்ளிய வஞ்சினங் கூறினான்; எ-று (௧௧)

௧௨ *பெருங்கை யிருங்களி றைவன மாந்திக்
கருங்கான் மராமபொழிற் பாசடைத் துஞ்சுஞ்
சுரும்பிமிர் சோலை மலைநாடன் கேண்மை
பொருந்தினார்க் கேமாப் புடைத்து.

தலைமகன் சிறைப்புறத்தானாக இயற்பழித்த தோழிக்குத் தலைமகளியற்பட மொழிந்தது

(இ-ள்) பெருங்கையையுடைய இருங்களிறு ஐவன நெல்லைத் தின்று கருங்காலையுடைய மராமபொழிலிற் பசிலை நிழலிற் றுயிலும் வண்டுகளொலிக்குஞ் சோலைமலைநாடன் கேண்மையைப் பொருந்தினார்க்கு ஏமாப்புடைத்து; எ-று (௧௨)

௧௩ வார்கதி ரேனல் வளைவாய்க்கிளிகவரு
நீராற் றெளிதிகழ் சோலைநாடன் கேண்மை
யார்வத்தி னா முயங்கினேன் வேலனு
மீர வலித்தான் மறி.

வெறியாட்டெடுத்துக்கொண்டவிடத்துத் தோழிக்குத் தலைமகள் அறத்தொடுநின்றது.

(இ-ள்) நீண்ட கதிரினையுடைய பசுந்தினையை வளைவாய்க்கிளியினங் கவருநீரானே தெளிந்து திகழாநின்ற சோலைகளையுடைய நாடன் கேண்மையைக் காதலினானிரம்ப மேவினேன்; பிரிதலாற்றேனாயினேன்; அவ்வாற்

* நச். ௩௧௧ - இளம் பூ. ௩௫௮ மேற்கோள்.

ருமை தெய்வத்தினையென்று முருகற்கு மறியையறுக்கத் துணிந்தான் வேலோன்; தோழி! இதனை விலக்குவாயாக; எ-று (கரு)

கச * குறையொன் றுடையேன்மற் றோழி நிறையில்லா
மன்னுயிர்க் கேமஞ் செயல்வேண்டு மின்னே
யராவழங்கு நீள்சோலை நாடனை நம்பி
லிராவார லென்ப துரை. †

தலைமகன் வரும்வழியின் ஏதத்துக்குக் கவன்ற தலைமகள் வரைவுவேட்டுத் தோழிக்குச் சொல்லியது.

(இ-ள்) நின்னொடொருகாரியமுடையேன்: தோழி! நிலைமையில்லாத வென்மன்னுயிர்க்கு அரணஞ்செய்யவேண்டும்; இப்பொழுதே பாம்புகளான் வழங்கப்படுகின்ற நீண்ட சோலையையுடைய நாடனை நம்மனையின்கணிரவு வரவேண்டா வென்பதனைச் சொல்; எ-று. (கச)

குறிஞ்சி முற்றும்.

---

# உ.—முல்லை.

கரு செங்கதிர்ச் செல்வன் சினங்கரந்த போழ்தினாற்
பைங்கொடி முல்லை மணங்கமழ வண்டிமிர்
காரோ டலம்வருங் கார்வானங் காண்டொறு
நீரோ டலம்வருங் கண்.

பருவங்கண்டழிந்த தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

(இ-ள்) செய்ய கதிரினையுடைய செல்வன் சீற்றமடங்கிய காலத்தின்கட் பசுங்கொடியையுடைய முல்லைகள் பூத்து

---

* தொல், பொரு, களவு, சூத்-உய, நச்சினார்க்கினியருரை மேற்கோள்.

† இது "தலைமகள் நெறிவிலக்குவித்ததற்குச் செய்யுள்" என்பர் அகப்பொருள் விளக்கவுரைகாரர். (சூத். கசுரு)

மணங்கமழ்தலான் வண்டுகள் ஆலிக்கக் கார்ப்பருவத்தோடு தடுமாறுகின்ற முகில்களையுடைய வானங் காணுந்தோறும் நீரோடுகூடத் தடுமாறுகின்றன கண்கள்; எ-று. (க)

கசு தடமென் பணைத்தோளி நீத்தாரோ வாரார்
மடநடை மஞ்ஞை யகவக்—கடன்முகந்து
மின்னோடு வந்ததெழில்வானம் வந்தென்னை
யென்னாதி யென்பாரு மில்.

இதுவுமது.

(இ-ள்) பெரியவாய் மெல்லியவாகி மூங்கில்போன்றிருந்த தோளினையுடையாய்! நம்மைத் துறந்தா ரிக்காலத்து வருகின்றிலர்; மெல்லிய நடையினையுடைய மயில்களழைக்கக் கடன்முகந்து மின்னுடனேவந்தது எழிலினையுடைய வானம்; ஆதலால், பின்னையும் என்னை வந்து நீ யென் செயக் கடவா யென்றிரங்கி யொன்றைச் சொல்லுவாருமில்லை; எ-று. (உ)

கஎ தண்ணறுங் கோடற் றுடுப்பெடுப்பக் காரெதிரி
விண்ணுயர் வானத் துருமுரற்ற—திண்ணிதிற்
புல்லுந ரில்லார் நடுங்கச் சிறுமாலை
கொல்லுநர் போல வரும்.

இதுவுமது.

(இ-ள்) குளிர்ந்தநறுங்கோடல் துடுப்புப்போலப் பூங்குலைகளை யேந்த கார்காலத்தை யேன்றுகொண்டு முகில்கண் மிக்க வானத்தின்கணுருமே றொலிப்பத் திண்ணிதாக முயங்குவாரையில்லாதார் நடுங்கும்வகை துன்பத்தைச் செய்யும் மாலை கொல்வாரைப்போல வாராநின்றது; எ-று. (ங)

கஅ கதழுறை வானஞ் சிதற விதழகத்துத்
தாதிணர்க் கொன்றை யெரிவளரப் பாறு
மிடிப்பது போலு மெழில்வான நோக்கித்
துடிப்பது போலு முயிர்.

இதுவுமது.

(இ-ள்) விரைந்த துளிகளை முகில்கள் இதழகத்தே சிதறத் தாதிணையுடைய பூங்கொத்துக்களையுடைய கொன்றைகள் எரிநிறத்தை மிகுப்பப்படர்ந்து கழலுவதுபோலும் எழில்விசும்பைக் காணுந்தோறும் வருந்தித் துடிப்பது போலாநின்றது என்னுடலம்; எ-று. (௪)

க௯ ஆலி விருப்புற் றகவிப் புறவெல்லாம்
பீலி பரப்பி மயிலாலச்—சூலி
*விரிவது போலுமிக் காரதிர வாவி
யுருகுவது போலு மெனக்கு.

இதுவுமது.

(இ-ள்) மழைத்துளிகளைக் காதலித்தழைத்துக் காடெலாந் தோகைகளைப் பரப்பி மயிலினங்களாடக் கருக்கொண்டு விரிவதுபோலுமிக்கார் முழங்க எனக்கு என்னுயிருருகுவதுபோலாநின்றது; எ-று. (௫)

௨௦ இனத்த வருங்கலை பொங்கப் புனத்த
கொடிமயங்கு முல்லை தளிர்ப்ப விடிமயங்கி
யானு மவரும் வருந்தச் சிறுமாலை
தானும் புயலும் வரும்.

இதுவுமது.

(இ-ள்) இனங்களையுடைய கலைகள் களித்துமிகப், புனங்களிலுள்ள கொடிமிடைந்த முல்லை தளிர்ப்ப, இடி

* 'வருவது' எனவும் பிரதிபேதமுண்டு.

யோடுகூடமிடைந்து யானுமென்காதலரும வருந்தத் துன்பத்தைச் செய்யும் மாலைதானும் மழைப்பெயலும் மேன்மேல் வாராநின்றன; எ-று. (௯)

௨௧ காரிகை வாடத் துறந்தாரும் வாராமுன்
காரகொடி முல்லை யெயிறீனக்—காரோ
டுடன்பட்டுவந்தலைக்குமாலைக்கோவெம்மின்
மடம்வாழ கிற்பா ரிலர்.

இதுவுமது.

(இ-ள்) எம்மழகு சுருங்க எம்மை நீங்கினாரும் வருவதற்கு முன்னே கருங்கொடியையுடைய முல்லைகள் நல்லவெயிறு போலவரும்பக் காரோடுடனே யுளதாய் வந்து எம்மை நலிகின்ற மாலைக்கு எம்மைப்போல வலியிழந்து மெலிவாற்றியிருந்து வாழ்வாரில்லை; எ-று. (௭)

௨௨ கொன்றைக் குழலூதிக் கோவலர் பின்னிரைத்துக்
கன்றமர் ஆயம் புகுதர—வின்று
வழங்கிய வந்தது மாலையாங் காண
முழங்கிவிற் கோலிற்று வான்.

இதுவுமது.

(இ-ள்) கொன்றையென்னுகின்ற குழலூதிக் கோவலர்பின்னே நிரைத்துக் கன்றை விரும்பிய நிரையாயங்களூர்தோறும்புக, இவ்விடத்தின்கண் வழங்கவேண்டி வந்தது மாலை; யாமிறந்துபடாதிருந்து காணும்படி முழங்கி வில்லைக் கோலிற்று மழை; எ-று. (அ)

௨௩ தேரைத் தழங்குரற் றூர்மணி வாய்திறப்ப
வார்கலி வானம் பெயலொருடங்கிக்-கார்கொள
வின்றுற்ற வாரா விடுவார்கொல் காதல
ரொன்றுணு நில்லா வளை.

இதுவுமது.

(இ-ள்) ஓசையையுடைய முகில்கள் பெயலைத்தொடங்கிக் கார்ப்பருவத்தைக் கொள்ள, நம் காதலர், தேரைப் போன்ற தழங்கு குரலையுடைய குதிரைத்தார்மணிகள் வாய் திறப்ப, இன்று நாம் ஆற்றியுளமாம்வகை வாராது விடுவார் கொல்லோ: தோழி! நம்வினை ஒன்றாகிலும் நிற்கின்றதில்லையால்; எ-று. (௯)

௨௪ கல்மேலர் புறவிற் கவினிப் புதன்மிசை
முல்லை தளவொடு போதவிழ—வெல்லி
மலைவற்று விட்டன்று வானமு முண்கண்
முலைவற்று விட்டன்று நீர்.

இதுவுமது.

(இ-ள்) கல்லெழுந்து கிடந்த கானத்தின் கண் அழகு பெற்றுப் புதல்கண்மிசை முல்லைகளும் செம்முல்லைகளும் பூக்கண்மலர இரவிகண் முகிலும் அலைவுற்று விட்டன: மையுண் கண்களும் முலைமறைய நீர் வார்ந்தன: எ-று. (௧௦)

௨௭* கார்புடைப் பிண்டி கமழப் புறவெல்லா
மார்ப்போ டினவண் டிமிர்ந்தாட-நீர்த்தன்றி
பொன்றூ தலைக்குஞ் சிறுமாலை மாறுழந்து
நின்றூக நின்றது நீர்.

இதுவுமது.

(இ-ள்) கரிய நிறத்தையுடைய அசோகு மலர்ந்து கமழக் கானமெல்லாம் மகிழ்வோடு வண்டின் தொகுதி முழங்கித் தாதளைந்தாடக் காண்பதால், அழகிய தாதுக்களைக் கொட்டுஞ் சிறிய மாலை மயக்கத்தைச் செய்தது; அதனானே கண்களினின்றும் பெருகு நீரா னிறைந்தது உடல்; இது நீர்த்தன்று. எ-று. (௧௧)

* ௨௫-௨௬-வது செய்யுட்கள் இதுபோது அகப்படவில்லை.

௨௪ குருந்தலை வான்படலை சூழச் சுரும்பார்ப்ப
வாயின் புகுதராப் போயினன்-ஆயிழாய்
பின்னோடி நின்றபா ராட்டு மழையென்கோ
வென்னோடு பட்ட வகை.

இதுவுமது.

(இ-ள்) குருந்துகளால் அலைக்கப்படுகின்ற பெரிய படலையைத் தொடர்ந்து வண்டுகள் ஒலிக்க வாயிலிற சென்றார்: தோழீ! என் கண்களினின்றும ஓடா நின்ற நீரைப் பின்னோடும் மழையென்பேனோ. எ-று. (௧௪)

முல்லை முற்றும்.

## ௩-பாலை.

௨௫ எழுந்துடைக் கன்னிமாக் கூர்வாய் விழத்தொடை
யம்பா லைக்குஞ் சுர நிறைந்த தும்பாரார்
பெருந்தகு தாளாண்மைக கேற்க வருமபொருள்
தருமவர் காத லவர்.

தலைமகளைத் தோழி செலவழுங்குவித்தது.

(இ-ள்) தகுதிப்பட்ட தாளாண்மைககேற்கப் பொருடருப நசையினாற் சென்ற நங்காதலர் கூர்ந்த பருக்கைககற்கள் நிறைந்த சுரத்தின் கண்ணே ஆறலைக்குங் கள்வர் கூரியவில்லிற் பொருந்திய அம்பாலலைக்கப்படுதலையுடையரார். எ-று. (௧)

௨௬ வில்லுழு துண்பார் கடுகிய தானைக்குங்
கல்சூழ் பதுக்கை யரணத் திறப்பார்கொன்
மெல்லியல் கண்ணோட்ட மின்றிப் பொருட்கிவர்ந்து
நில்லாத வுள்ளத் தவர்.

ஆற்றினென்ற தோழிக்கு ஆற்றுவல் என்பதுபடச் சொல்லியது.

(இ-ள்) மென்மையுடையாளிடத்துக் கண்ணோட்டமில்லாது, பொருளை விரும்பிச் சென்றுள நங்காதலர் இல்லாவிடத்துத் துன்பமும் அவரது தாளையும் நெருங்கிப் பாதங்களைக் கற்கள் நிறைந்த சுரத்தைக் கடப்பார்கொல்' எ-று (௨)

௩௧ பேழ்வாயிரும்புலி குஞ்சரங் கோட்பிடிக்கும்

பாழூர்ப் பொதியிற் பகற்பார்க்கு மாரிடைச்
சூழாப் பொருணசைக்கட் சென்றோரை நினைந்து*
வாழ்தியே மற்றெ னுயிர்.

இதுவுமது.

(இ-ள்) பெருவாயினையுடைய புலி யானைகட்குத் தீங்கு நினைத்து நிற்குஞ் சுரஞ் சூழ்ந்த வழியைவிட்டு அகன்றார் பொருளை விரும்பிச் சென்ற நங்காதலரென்று நினைந்து உயிரே! ஆற்றுவாயாக. எ-று. (௩)

௩௨ நீரி லருஞ்சுரத் தாமா னினம்வழங்கு
மாரிடை யத்த மறைப்பர்கொ லாயிழாய்
நாணினை நீக்கி யுயிரோ டுடன்சென்று
காணப் புணர்ப்பதென் னெஞ்சு.

தலைமகன் செலவு கேட்ட தலைமகள் ஆற்றளாய்க் கூறியது.

(இ-ள்) நீர் வற்றிய அருமையான சுரத்திலே விலங்கினங்கள் நெருங்கித் திரிகின்ற வழியில் நங்காதலரை வேட்டுவர் மறைப்பரோ! ஆயிழாய்! நாணைக்கைவிட்டு அவருடனே சென்று காணும்படித் தூண்டுகின்றது என்னெஞ்சு, எ-று. (௪)

௩௩ பொறிகிளர் சேவலரிமாற்† குத்தி
நெறிதூ ரருஞ்சுர நாமுன்னி விடலா

* பி-ம் சென்றோனருணினைந்து.

† அரிமாற்றிரங்கி கரிபுறக்கிடைக்கை-சிலம்பு-காடுகாண் என

மயர்வொழி சேணுறங் கொடியக நாட்டத்
துயர்ந்து தோன்று மலை.

ஊர் அணித்தென்றல்.

(இ-ள்) புள்ளிகள் விளங்குகின்ற சேவல் வரியை யுடைய மருளைக்கொத்தி யிட்டு நெறியைத் தூர்க்கும் இவ் வரிய சுரத்தை நாம் கடந்துவிடுவோம்; பேதாய்! அயர் வொழிவாயாக: அதோ தோன்றுங் கொடி நமது நாட்டகத்து மலையிற்றோன்றுவது. எ-று. (ரு)

சசு பிரிவர் கூர்மை மறமுளை சேர்ந்தலக்குங்
கூருகி ரெண்கி னருங்கிளை கண்படுக்கு
நீரி லருஞ்சுர முன்னி யறியார்கொ
லீரமி னெஞ்சி னவர்.

ஆற்றாளெனக் கவன்ற தோழிக்கு ஆற்றுவலெனக் கூறியது.

(இ-ள்) தோழீ! அன்பற்ற மனமுடையவரெனினு நங்காதலர் குற்றியை வெளிப்படுத்த வல்ல கூர்மையுடைய மறமுளையைப்போற் சேர்ந்து துன்புறுத்தவல்ல கூரிய நகங்களையுடைய கரடியின் கிளைகளும் கண்படுக்கும் நீரற்ற அருஞ் சுரத்திற் சென்றறியார் கொல்லோ! எ-று. (சு)

சரு சூரற் புறவி னணில்பிளிற்றுஞ் சூழ்படப்பை
யூர்கெழு சேவதி யோடுவார் திளைக்குந்
தேரொடு கானந் தெருளிலார் செல்வர்கொ
லூரிடு கவ்வை யொழித்து.

தலைமகனது செலவுணர்ந்து அழுங்கிக்கூறியது.

(இ-ள்) சூரற்றூறில் அணில் பிளிற்றும் படப்பை சூழ்ந்த சிற்றூரிற் பொருணசையாற் சென்றார் திளைக்குந் தேரோடு சுரத்துத் தெருளமாட்டாராய்ச் செல்வார் கொல் லோ! ஊரிலுண்டாகிய அலரை அறியாது. எ-று. (எ)

கசு முள்ளுடை மூங்கிற் பிணங்கிய சூழ்படப்பை
புள்ளி வெருகுதன் குட்டிக் கிரைபார்க்குங்
கள்ளம் வழங்குஞ் சுரமென்பர் காதல
ருள்ளம் படர்ந்த நெறி.

பிரிவின்கண் ஆற்றளாய தலைமகளைத் தோழி யாற்றுவித்தது.

(இ-ள்) கூரிய முள்ளையுடைய மூங்கில் பிணங்கிச் சூழ்ந்த கொல்லையிற் புள்ளிகளையுடைய பூனை தன் குட்டிக்கு இரைபார்க்குங் களவு நிறைந்த சுரமென்பர் காதலரின் மனஞ் சென்ற நெறி. எ-று. (அ)

கஎ பொரிப்புற *வோமைப் புகைபடு நீழல்
வரிநுதல் யானை பிடியோ டுறங்கு
மெரிமயங்கு கானஞ் செலவுரைப்ப னில்லா
வரிமயங்குண் கண்ணு ணீர்.

செலவுமறுத்தது.

(இ-ள்) பொரிந்த புறத்தையுடைய ஓமையினது புகைபடும் நீழலில் கோடுகள் பொருந்திய நெற்றியையுடைய யானை தன் பிடியோடுறங்குந் தீமயங்கிய பாலையிற் செல்லவுரைப்பர் காதலர்: அரிபடர்ந்த கண்களில் நீர் நில்லாவாயின. எ-று. (கூ)

கஅ கோளுள் வல்பயமில் வியமாக் குழுமு
தாஅள்வீ பதுக்கைய கான மிறந்தார்கொ
லாள்வினையி னாற்ற லகன்றவர் நன்றுணரார்
மீளிகொண் மொய்ம்பினவர்.

ஆற்றுவலெனக் கூறியது.

(இ-ள்) வினைவல்ல அச்சமில்லாத விலங்குகள் திரண்ட அடிகளைக்குத்தும் பதுக்கை நிறைந்த சுரம கடந்தார

* தீப்பக்காலத்து வெப்பமாறுதோமை. பெருங்கதை I ரு உ வ கூஉ
அகலிலை ஓமை ஷை V ரு நிஉ.

கொல்லோ! மிக்கவலிமையுடைய எயினர் பொருணசையாற் சென்றவராற்ற லறியார் போலும். எ-று. (௰)

௲௧ கொடுவரி வர்ய்த்த துணையிழந் தஞ்சிக்
கடுவுணங்கு பாறைக் கடவு டெவிட்டு
நெடுவரை யத்த மிறப்பர்கொல் கோண்மா
படுபகை பார்க்குஞ் சுரம்.

இதுவுமது

(இ-ள்) தோழீ! வளைந்த வரிகளையுடைய தன்றுணையை யிழந்தஞ்சி எதிர்வரும் பகையைப் புலி பார்த்து நிற்குஞ் சுரத்தைக் கடுவைக் கழுத்திலுடைய கடவுளது மலையை நிகர்த்த அத்தவரையை எல்லைடைவதன்முன் செல்லார் கொல்லோ! எ-று (௧௧)

௪௰ மன்ற முதுமரத் தாந்தை குரலியம்பக்
குன்றக நண்ணிக் குறும்பிறந்து—சென்றவ
ருள்ளிய தன்மையர் போலு மடுத்தடுத்
தொள்ளிய தும்மல் வரும் †.

நிமித்தங் காட்டிக் கூறியது.

(இ-ள்) முதுமரப் பொந்திற் பொருந்திய ஆந்தை குரலியம்பக் குன்றக நண்ணிவந்து பின் சிற்றூரினின்றும நம்மை நினையுந்தன்மையுடையர் போலும்; அதனானே தோழீ! அடுத்தடுத்துத் தும்மல்வரும் எ-று. (௧௨)

† நினைப்பவர் போன்று நினையார் கொறும்மல் சினைப்பது போன்று கெடும். என்ற கூ௩௱-வது திருக்குறளையும் சேய்மைக் கண்ணராய கேளிர் நினைந்துழி அந்நினைக்கப்பட்டார்க்கு தும் மறேன்று மென்னு முல்கியல் பற்றி என்னுபரிமேலழகாது விசேடக் குறிப்பையு நோக்குக.

சக பூங்கணிடமாடுங் கனவுந் திருந்தின
வோங்கிய குன்ற மிறந்தோரை யாநினைப்ப
வீங்கிய மென்றோள் கவினிப் பிணிதீரப்
பாங்கத்துப் பல்லி படும்.

இதுவுமது.

(இ-ள்) அழகிய இடக்கண்ணாடாநின்றது; யான் காணுங் கனாக்களுந் திருந்தின; உயர்ந்த குன்றுகளை நிறைந்த பாலையைக் கடந்தாரை யாநினைப்ப வாடிய மெலிவிய தோள்களும் பசலை நீங்கி யழகிதாகவும், பக்கத்தும் பல்லி படாநிற்கும் எ-று. (கங)

சஉ ஒல்லோமென் னெஞ்சே யுயங்கி யிருப்பவோ
கல்லிவர் தமரம் காற்பெய் சிலம்பொலிப்பக்
கொல்களி றன்னான்பின் செல்லுங்கொ லென்பேதை
மெல்விரல் சேப்ப நடந்து.

நற்றுயிரங்கல்.

(இ-ள்) மாட்டேம் நெஞ்சே யுயங்கி யிருப்பவோ. அழுந்திக் கல்லை யிவர்தலா லுண்டாகும் பேரொலியாகக் காலிற் பூட்டிய சிலம்பொலிப்ப, மெல்லியவிரல் சேப்ப, கொல்களிறன்ன சிறப்பத்தையுடையான் பின் என் பேதை செல்லுமோ! எ-று. (கச)

பாலை முற்றும்.

# ச—மருதம்.

சங ஆற்ற லுடைய னரும் பொறிநுர் நல்லூர
னேற்றுச் சிறிதாய கார்வஞ்சி-யேற்றுருவைக்

கட்டி கழுத்திற் புதல்வன் மாயிற்றே
பட்டஞ் சிதைப்ப வரும்.

தோழி தலைவிமை யாற்றுவித்தது.

(இ-ள்) அரிய புலனிறைவுடைய நல்லூரான் சேற்றுண்டாய சிறு தாய காய்வினை நினைந்து தாங்கவல்லன்; புதல்வன் எறும்போலு முகவுமுடையான் கழுத்தைக்கட்டவும், மதாணியைச் சிதைப்பவும் நினைந்துவரும் மாயிற்று. எ-று (க)

சச அகன்பணை யூரனைத் தாமம் பிணித்த
திகன்மை கருதி யிருப்பன்—புகனமர்
வேதின் மகளிரை நோவ தெவன்கொலோ
பேதைமை கொண்டொழுகு வார்.

தோழி வாயின் மறுத்தல்.

(இ-ள்) பாண! பேதைமைகொண்டொழுகுபவராகிய எதின் மகளிரை நோவதென்? அகன்பணையூரனை மாலையாற் பிணித்தமையை நினைந்து அவன் கிற்பானாயினன். எ-று. (உ)

சரு பாத்தில் கழுத்திற் புதல்வனுறச் சான்றூஉ
மூத்தோடு மினியர் வருமுலையார் சேரியுள்
நீத்துநீ ருண்வாய்ப் பாணநீ போய்மொழி
கூத்தாடி யுண்ணினு முண்.

இதுவுமது.

(இ-ள்) வளர்கின்ற முலையையுடையார் தம் சேரியுள் நீ நுணவருந்தும் பாணனே!, சேரியுள் புதல்வன் கழுத்தைககட்டிச் சான்றாய் நிற்கக் காதலர் முற்செல்வார்; நீ சொல்லினுஞ் சொல்; கூத்தாடி யுண்ணினு முண். எ-று (ரு)

௪௬ ஊழலை முருக்கிய செந்நோக் கெருமை
பழனம் படிந்து செய்மாந்தி — நிழல்வதியுந்
தண்டுறை யூரன் மலரன்ன மார்புறப்
பெண்டிர்க் குரைபாண வுய்ந்து.

இதுவுமது

(இ-ள்) பாண! உழுதலை மறுத்துச் சிவந்த கண்களையுடைய எருமை பழனத்திற்படிந்து மாந்தி நிழலிலே தூங்குங் குளிர்ந்த துறையையுடைய ஊரனது மலரன்ன மார்பைப் புல்லுதற்குச் சென்று பரத்தையர்க்கு உரைப்பாயாக. எ-று. (௪)

௪௭ தேங்கமழ் பொய்கை யகவய லூரனைப்
பூங்கட் புதல்வன் மிதித்துழக்கு — மீங்குத்
தளர்முலை பாராட்டி யென்னுடைய பாவை
வளர்முலைக்கஞ் ஞெமுகுவார்.

தோழி துறை நயப்பித்தது.

(இ-ள்) ஆங்கு மண நாறுகின்ற பொய்கை சூழ்ந்த பரந்த வயல்களையுடைய ஊரனை அழகிய கண்களையுடைய புதல்வன் மிதித்துழக்கும்; இங்குள்ளார் என்னுடைய பாவையினைத் தளர்முலைபாராட்டுவதாம் வளர்முலையாலுண்டாகிய துன்பத்தினை யறியார். எ-று (௫)

௪௮ * பேதை பகலைப் புதல்வன் றனைச்சான்று
மோதநீர் வேலி மகிழ்நற் கென்செய்தும் *
பூவார் குழற்கூந்தற் பொன்னன்னார் சேரியுள்
ளேவாது செல்பாண நீ.

பாணற்கு வாயில் மறுத்தது.

* திணைமொழி ஐம்பது ௩௪. நோக்குக.

(இ-ள்) பாண! தலைவி பகற்பொழுதைச் சிறுவன் றுணையாகக் கழிக்கின்றாளாதலின் கடலை வேலியாகவுடைய மகிழ்நற்கு யாம் என்செய்த வியாலும்; பூக்களை யணிந்த குழலையுடைய பொன்னன்னார் சேரியுள் வராது சென்று ஆராய்வாயாக. எ-று. (௬)

௪௬ யாணர் நல்லூரன் றிறங்கிளர்ப்ப வென்னுடைய

பாண விருக்க வதுகளை—நாணுடையாந்

தன்னுற்ற தெல்லா மிருக்க விரும்பானை

நின்னுற்ற துண்டே லுரை. *

இதுவுமது.

(இ-ள்) புதியவருவாயினையுடைய நல்லூரனது பெருமையை மிகைப்படுத்திச் சொல்வதை நிறுத்துவாயாக, பாண! நாணுடையவராய அத்தலைவியிடத்து அவ்வகைப்பட்ட நலனுமிருக்க விரும்பானைப்பற்றிய வெண்ணம் நினக்குச் சேர்ந்ததுண்டாயின் அதனைச் சொல்வாயாக. எ-று. (௭)

௫௰ ஒள்ளிதழ்த் தாமரைப் போதுறழு மூரனை

யுள்ளங்கொண் டுள்ளாளென் றியார்க்குரைக்கோ-வொள்ளிழாய்

நச்சுப் பணிமொழியுண் டேனான் மேனாளோர்

பொய்ச்சூ ளெனவறியா தேன்.

துறை நயப்பித்தது.

(இ-ள்) ஒள்ளிய இதழ்களையுடைய தாமரைப்பூவினை யொத்த ஊரனை யுளத்திற் கொண்டுள்ளா ளென்று யாரிடத் துரைப்பேன்; அவரது நஞ்சு போன்ற முன்னாட்சொன்ன மொழி பொய்ச் சூளாமென வறியாதவளாயினேன். எ-று. (௮)

* ஐந்திணை ஐம்பது உ௬. இங்கு கவனிக்கற்பாலது.

௫௩ பேதைய ரென்று தமரைச் செறுவவோ
போதுறழ் தாமரைக் கண்ணனே—தாதக
லாயாது பாடு மிருப்பவோ மாணிழாய்
நோவதென் மார்பறியு மின்று.

ஆற்றாமையே வாயிலாகப் புக்க தலைமகன் புணர்ந்து நீங்கிய பின்பு
சென்று தோழிக்குத் தலைமகள் கூறியது.

(இ-ள்) பேதைய ரென்று தமரைக் கோபிக்கத்தகுமோ! தாமரைப்போதினை யொத்த கண்ணனைக் காதற்காலம் வாய்ச்சிறைப்படுத்திருப்பதைக் கூறுமோ! நீ அதனைக் கூறுவது! இதனை இன்று என்னெஞ்சு அறியும் எ-று (௫௩)

௫௪ காதலிற் றீரக் கழீஇ முயங்கன்மி
னேந்து நன்று மொழியு னூரனைப்
பேதைப்பட் டேங்கன்மின் நீயிர் நமனில்லா
ளோசை யொழிய வுரைத்து.

தோழி கூற்று.

(இ-ள்) ஒலிக்கின்ற புனலாற் சூழப்பட்ட ஊரனோடு நீவிர் பெரிய இளநிலையில் ஆசை நீங்கப் பேசிக் காதல் நீங்குமாறு மிக முயங்கற்க; பின்னர் பேதை மனத்தினளாய் ஏங்கத் தக்க நோயை நீ அடைவாய். எ-று. (௫௪)

௫௫ உண்ணாட்டுஞ் சான்றவர் தந்த நசையிற்ற
னெண்ணாற்றுக் கண்ணோட்டந் தீர்க்குது மென்னை
வழிபாடு கொள்ளும் வளவய லூரன்
பழிபடு நின்மேலது.

இதுவுமது

(இ-ள்) வளமையான வயலையுடைய ஊரன் உண்ணாட்டுஞ் சான்றபரத்தையர் தந்த வாசையில் மாழ்கினு

ளைப்த்தான் என்னாத தலைவிக்குக் கண்ணோட்டந் தீர்க்குந்து மென்றெண்ணரி வழிபாடுகொள்ளுமை; வாயின், மறுத்தால் நின்மேற் பழியுண்டாகும் எ-று. (கக)

ருச உண்டுறைப் பொய்கை வரா அலினமிரியுந்
தண்டுறை யூர தகுவதோ—ஒண்டொடியைப்
பாராய் மனைதுறந்து தேரிற் செலவதனை
யூராண்மை யாக்கிக் கொளல்.

வாயின் மறுப்பாளாய்த் தோழி தலைமகற் குணர்த்தியது.

(இ-ள்) பொய்கையின் கண்ணே வாலினம் திரிகின்ற குளிர்ச்சி பொருந்திய துறையையுடைய ஊரனே! ஒண்டொடியைப்பாராது இல்லைத் துறந்து தேரிற் செல்வதனைப் பெருமையாக்கிக் கொள்வது நினக்குத் தகுதியோ? எ-று. (கஉ)

ருரு பொய்கை நல்லூரன் றிறங்கிளர்ப்ப தென்னுடைய
வெவ்வ மெனினு மெழுந்தீக—வைக
மறுவில் பொலந்தொடி வீசுமா லாற்றுஞ்
சிறுவ னுடையேன் றுணை.

விறலிக்கு வாயின் மறுத்தது.

(இ-ள்) பொய்கை நல்லூரனது நன்மை விளங்க என்னுடைய தனிமை புண்டெனினும நீ சென்று ஆண்டு வைகுவாயாக; மறுவில் பொலந்தொடி நினக்கு வேண்டியன ஈயும்; யான் சிறுவன் றுணையாக நின்று ஆற்றுவேன். எ-று. (கங)

ருசு விளைவ்ய லூர கலனுரைக்கு மாதர்
*வளைஇய சக்கரத் தாழி—கொளைபிழையா

* இதனை, இத்துறைக்கே உதாரணங் காட்டுவர் நச்சினார்க்கினியர் - தொல் - பொருள் சூ-கருடு.

தென்றிடை யிட்டு வருமேனின் வாழ்நாழ்க
ளொன்றி யனைத்துமு ளேன்.

தலைவி கூற்று.

(இ-ள்) விளையவயலூரானை வளைத்த பரத்தையாரது வஞ்சகத்தினின்றும் தப்பிவருமேல் நின் வாழ் நாளெல்லாம் அற்றிருப்பேன் எ-று. (கச)

மருதம் முற்றும்.

# ரு.—நெய்தல்.

ருஎ ஒழுகு திரைக்கரை வான்குருகு வின்றாவி
யுழிதரு முதை யெடுக்குந் துறைவனைப்
பேதையா னென்றுணரு நெஞ்சமினி துண்மை
யூதிய மன்றோ வுயிர்க்கு.

தலைவியுடன்கேள்.

(இ-ள்) மேலோங்கி வருகின்ற அலைகளையுடைய கரையிலே பெரிய அன்னங்களின்றாவி உழிதருமபடி ஊதைக் காற்றடிக்கும் துறைவனைப் பேதையானென்றெண்ணும் உணரு நெஞ்சு இனிதுண்மை நம்முயிர்க்கு ஊதியமன்றோ தோழீ! எ-று. (க)

ருஅ என்னைகொ ரேழி யவர்கண்ணு நன்கில்லை
யன்னை முகனு மிகுத்தளர—நாமினி
புன்னையம் பூங்கானற் சேர்ப்பனைத் தக்கதோ
நின்னல்ல தில்லென் றுரை.*

தலைவிதோழிக்கு அறத்தோடு நிற்றல்.

* இதனை இத்துறைக்கே உதாரணம் காட்டுவர் நச்சினார்க்கினியர் தொல்—பொருள் சூத் ககஉ.

(இ-ள்) தோழி! என் இரு கண்ணும் நன்கில்லை: ஆய முகமும் மிகத்தளராநின்றது: நாம் இனிப்புன்னையங் கானற் சேர்ப்பனைக் காண்டல் தக்கதோ? ஆகக்க நின்னில்லை நில்லையென்றுரைப்பாயாக. எ-று. (௨)

௫௯ இடுமணலெக்க ரகன்கானற் சேர்ப்பன்
கடுமான் மணியரவ மென்று—கொடுங்குழை
புள்ளரவங் கேட்டுக் கலுழ்ந்தாள் சிறுகுடியா
ருள்ள நாணுவ ரென்று. †

தமரை அஞ்சியது.

(இ-ள்) புட்களின் அரவங்கேட்டு இடப்பட்ட மணலாலாய எக்கர்படிந்த அகன்ற கானலையுடைய சேர்ப்பனது கடிய மாவினது மணியோசை யென்று கொடுங்குழை சிற்றூரிலுள்ள தமர் சினங்கொள்வரென்று வருந்தினாள்: ஆகையால் சேர்ப்பனே! இனி நீ வாராதொழிவாயாக. எ-று. (௯)

௬௰ மணிநிற நெய்த லிருங்கழிச் சேர்ப்ப
னணிநல முண்டகன்றா னென்றுகொ லெம்போன்
றணிமல ரெக்கர்மே லோதம் பெயர்ந்து
துணிமுன்னீர் துஞ்சா தது. ‡

தோழி தலைவன் சிறைப்புறத்தானாகக் கூறியது.

(இ-ள்) அழகிய நிறத்தினையுடைய இருங்கழிகள் பொருந்திய நெய்தனிலத்துத் தலைவன் அணிநலமுண்டு நீங்கி

---

† இதனைத் தலைவன் குறியிடத்து வரிற் சுற்றத்தார் அறிவரென்பதற்கு உதாரணங்காட்டுவர் நச்சினார்க்கினியர். தொல்-பொருள்-சூ ௧௩௩.

‡ இதனை இத்துறைக்கே உதாரணங்காட்டுவர். நச்சினார்க்கினியர்-தொல்-பொருள்-சூ ௪௩௩.

ளன்: எம்மைப்போல் வாடிய மலர்களையுடைய எக்கர் மேல் ஓதம் பெயர்ந்து கடல் செல்லாததையும் கண்டா ளில்லை. எ-று. (௪)

௬௧ கண்டிரள் முத்தம் பயக்கு மிருமுன்னீர்ப்
பண்டங்கொ ணாவாய் வழங்குந் துறைவனை
முண்டகக் கான லுட் கண்டே னெனத்தெளிந்தே
னின்ற வுணர்விலா தேன்.*

புணர்ச்சி வருத்தந் தருமென்று தெளிதல்.

(இ-ள்) பெரிய கடலிடத்தே பண்டநிறைந்த நாவாய் திரிகின்ற கடற்றுறைவனை முண்டகக்கானலுட் கண்டேனென நின்ற வுணர்விலாத யான் கண்டிரள் முத்தம் பயப்பந்தனன் எ-று. (௫)

௬௨ அடும்பிமி ரெக்க ரலவன் வழங்குங்
கொடுங்கழிச் சேர்ப்ப னருளா னெனத்தெளிந்து
கள்ள மனத்தா னியனெறிச் செல்லுங்கொ
னல்வளை சோர நடந்து.

துறை நயப்பித்தது.

(இ-ள்) அடம்ப மலர் நிறைந்த எக்கரில் நண்டு விளையாடுங் கழியையுடைய தண்ணந்துறைவன அருளானெனத் தெளிந்தேன்: தோழி! என்வளை சோரவிட்டுத் தலைவன் தனக்குரிய நெறியிற் செல்லுவானோ? எ-று. (௬)

௬௩ கண்ணுறு நெய்தல் கமழுங் கொடுங்கழித்
தண்ணந் துறைவனோ தண்ணி லனையிழாய்

---

[1] இதனை இத்துறைக்கே உதாரணங்காட்டுவர். நச்சினார்க்கினியர். தொல்-பொருள் சூத். ௧௧௧, பக். ௨௭௨. நம்பி அகப்பொருள் [illegible] ௧௨௮.

